நம் நாடு

மலர் 3, இதழ் 175 [i.e. 114]

October 26, 1955

Record no. 1131

REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: ஐப்பசி 9உ புதன் (26—10—55) ★ ★ வெளியூர்: ஐப்பசி 10உ வியாழன் (27—10—55) [இதழ் 175

## ரூ. 120 கோடி செலவில்

### போர்ப் படையினருக்கு குடியிருப்பு வசதி

போர்ப் படையினரில் பல அந்தஸ்திலுள்ளவர்களுக்கும் தேவையான அளவு குடியிருப்பு வசதி செய்து கொடுப்பதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பல வேலைகள் மேற்கொள்ளப்படும்; பெரிய வேலைகளுக்காக ரூ. 120 கோடி செலவழிக்கப்படும் என்று தெரியவருகிறது; இது தவிர, பராமரிப்புக்காகவும், சிறிய வேலைகளுக்காகவும் ரூ 60 கோடி செலவு செய்யப்படும். இந்தத் தொகை ஐந்து ஆண்டு காலத்தில் பரவலாகச் செலவு செய்யப்படும்.

# கடவுள்-மனிதரால் உண்டாக்கப்பட்டவரே!

## மதம்-சுரண்டுபவர் ஊட்டும் நஞ்சு!

### ரஷ்ய வானொலியில் பிரச்சாரம்!

லண்டன். அக். 25—

"கடவுள் மனிதனை உண்டாக்கவில்லை; கடவுளை உண்டாக்கியவன் மனிதனே," என்ற பிரச்சாரம், ரஷ்ய நாட்டில், வானொலி மூலம் மேற்கொள்ளப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

"கிழக்கத்திய நாட்டு மக்கள், பூமியில் மன்னராட்சி முறையின் பிரதிபிம்பமாகக் கடவுளை உண்டாக்கினர்கள்; மனித சமூக வளர்ச்சிக்கு, கிழக்கத்திய நாட்டவர் வழங்கிய தீங்கான அம்சம்தான், 'ஒரே கடவுள் உண்டு' என்ற வாதம்,' என்றார்," விளக்கம் தரப்படுகிறதாம்.

"சுரண்டும் வர்க்கங்களின் நலன்களுக்கு உதவுவதற்காக உருவாக்கப்பட்ட நஞ்சுதான் மதம்" என்றும் மத எதிர்ப்பு உணர்வு ஊட்டப்படுகிறதாம்.

இம்மாதிரிப் பிரச்சாரம், கடந்த அக்டோபர் 17-ந் தேதியன்று, ரஷ்ய மொழிகளுள் ஒன்றில், கிராஸ்னி சோவியத் வானொலியால் மேற்கொள்ளப்பட்டதாக இங்கு தெரிய வந்துள்ளது.

## பாகிஸ்தானில் பெரும் போராட்டம்!

### ஒருறுப்புத் திட்டத்திற்கு எதிராக நடைபெறும்

#### அவாமி லீக் முஸ்தீபு

டாக்கா, அக். 25—

"மேற்கு பாகிஸ்தான் முழுவதையும்—தங்களுக்கிருந்த பெரும்பான்மை பலத்தால்—ஆளும் கட்சியினர், ஒரே மாநிலமாக ஆக்கியுள்ளதை எதிர்த்து பாகிஸ்தான் முழுவதிலும் பெரும் போராட்டம் ஒன்றை நடத்த சீக்கிரமே ஒரு ஜனநாயக இயக்கம் உருவாகும்,"

—என்று, எல்லை மாகில அவாமி லீக் தலைவரான மான்கி ஷெரிப் பீர் தெரிவித்திருக்கிறார்.

இந்தக் கொள்கை அடிப்படையிலேயே அடுத்த பொதுத் தேர்தல் நடைபெறும் என்றும், வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்ட இந்த ஒருறுப்புத் திட்டத்தை எதிர்த்தே நிச்சயம் பாக். மக்கள் வாக்களிப்பர் என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

### கி. பாகிஸ்தான் கவர்னராக பஸ்லுல் ஹக்?

'கிழக்கு பாகிஸ்தான் கவர்னராக ஏ. கே. பஸ்லுல் ஹக்கை நியமிக்கவேண்டும்' என சில ஐக்கிய முன்னணி உறுப்பினர்கள் கருத்தறிவித்திருப்பதாயும், ஆனால், இதனை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ளாது என்றும் கூறப்படுகிறது.

### 100 வெளிநாட்டுமாணவர்களுக்கு உபகாரச் சம்பளம்!

இந்தியாவில் உயர்தரக் கல்வி பெறுவதற்காக வெளிநாடுகளில் நிரந்தரமாகக் குடியேறிவிட்ட இந்திய மாணவர்களுக்கும், 'காமன் வெல்த்' நாடுகள் உள்ளிட்ட 32 வெளிநாட்டு மாணவர்களுக்குமாக 100 பேருக்கு உபகாரச் சம்பளம் வழங்க இந்திய சர்க்கார் திட்டமிட்டிருக்கின்றனர்.

### வெள்ளத் தடுப்பு

#### பாகிஸ்தான், இந்தியா கூட்டு முயற்சி

கல்கத்தா, அக். 25—

இந்தோ—பாகிஸ்தான் துணைக் கண்டத்தில் வெள்ளம் ஏற்படுவதற்கான காரணங்களையும், அவற்றைத் தடுப்பதற்குரிய வழிகளையும் அறிய கூட்டு விசாரணை நடத்துவதற்கு இந்தியா, பாகிஸ்தான் சர்க்கார்கள் கொள்கை அளவில் ஒத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

சிங்கப்பூரில் நடைபெற்ற கொழும்புத் திட்ட மாநாட்டில் கலந்துகொண்டு திரும்பிய பாக். வெளிவிவகார இலாகா மந்திரி ஹமீதுல் ஹக் சௌத்ரி, இங்கு நிருபர்களிடை பேசுகையில் இந்தத் தகவலை வெளியிட்டார்.

தான், சிங்கப்பூரில், இந்தியத் திட்ட இலாகா மந்திரியான ஜி. எல். நந்தாவுடன் இது குறித்து விவாதித்ததாயும் தெரிவித்திருக்கிறார்.

'வெள்ளத் தடுப்புக்கான கூட்டு முயற்சிகளை மேற்கொள்ளுவதற்குப் போதுமான பண வசதியும் இருக்கிறது. வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகளைப் பரிசீலித்து, அவற்றை மேற்கொள்ளுவதில் குறிப்பிடத்தகுந்த அளவு முயற்சி செய்யப்பட்டிருக்கிறது' என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

## விழிப்புடனிருக்குமாறு பாக். இராணுவத்துக்கு தாக்கீது!

கராச்சி, அக். 25—

"பாகிஸ்தான்—ஆப்கன் எல்லையில் உள்ள பாகிஸ்தான் இராணுவத்தினர், முன்னை விட அதிகமாக எச்சரிக்கையுடனிருக்க வேண்டும்," என்று, பாகிஸ்தான் சர்க்கார் விழிப்பூட்டும் 'தாக்கீது' ஒன்றை அனுப்பியிருப்பதாகத் தெரிய வருகிறது.

ஆப்கன் எல்லைக்குள், மலைவாழ் மக்களின் நடவடிக்கை மேலும் அதிகரித்திருப்பதினால்தான் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதாம்.

"ஆக்கிரமிப்பு நடைபெறுமானால், பாகிஸ்தான் தாக்குதலைத் துவங்கும்,"

என்று, தகவல் தந்த அதிகார வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

## உள்நாட்டு விவகாரத்தில் ஐ. நா. குறுக்கீடாம்!

### நிற பேதக் கொடுமையை விவாதிப்பதற்கு தென்னாப்பிரிக்கா எதிர்ப்பு

நியூயார்க், அக். 25—

ஐ. நா. பொதுச்சபையின் தனி மாநாடு, தென்னாப்பிரிக்க நிறபேதக் கொடுமை குறித்து விவாதிக்க முற்பட்டதும் அங்கிருந்த தென்னாப்பிரிக்கப் பிரதிநிதிகள், மண்டபத்தினின்றும் வெளியேறியிருக்கின்றனர்.

தென்னாப்பிரிக்க சர்க்காரின் உள்நாட்டு விவகாரங்களில், ஐ நா. நிறுவனம் தொடர்ந்து குறுக்கிடுவதாகத் தென்னாப்பிரிக்கப் பிரதிநிதி கூறினார்.

ஏதேனும் மாநாட்டில் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டு வாக்கெடுப்பு நடைபெறுமானால், அதில் கலந்துகொண்டு வாக்களிக்கும் உரிமையைத் தாங்கள் ஒதுக்கி வைத்துக் கொண்டிருப்பதாகவும், தெ. ஆப்பிரிக்க பிரதிநிதிக் குழுத் தலைவர் தெரிவித்திருக்கிறார்.

★

## 'நிறபேத கொடுமை பலாத்காரத்தை தூண்டுகிறது'

### ஐ. நா. விசாரணைக் குழுத் தலைவர் எச்சரிக்கை

ஐ நா. அரசியல் குழுவின் விசேடக் கூட்டம் ஒன்றில் ஐ நா. நிறுவன நான் விழாவை ஒட்டிப் பேசுகையில், தென்னாப்பிரிக்க இனவேற்றுமை குறித்த ஐ நா விசாரணைக் குழுத் தலைவரான டாக்டர் ஹெர்மன் சார்தாக்ரஸ் சொன்னார்:—

"தென்னாப்பிரிக்காவில் இன்றுள்ள இன வேற்றுமை கொடுமை, பலாத்காரத்தை எந்த நேரத்திலும் தூண்டக் கூடியதாயுள்ளது! அப்படி நேர்ந்தால், அங்குள்ள சிறுபான்மையினரான வெள்ளை இனத்தவரின் உரிமைகள் வெகுவாகப் பாதிக்கப்படும்."

அவர் மேலும், தனது தலைமையில் இருந்த விசாரணைக் குழு, தென்னாப்பிரிக்க நிறபேதக் கொடுமையை உலகில் எவரும் ஏற்றுக்கொள்ளவில்லை என்று கண்டிருக்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

கூட்டத்தில் தென்னாபிரிக்காவும், பிரான்சும் கலந்துகொள்ளவில்லை.

### வருவாயைக் குறைத்துக் கொள்வார்

காட்மண்டு, அக். 25—

நேபாள மன்னரான மகேந்திரா, தான் பெற்றுவரும் தொகையான ரூ 22,00,000-த்தில் 5 சத விகிதம் குறைத்துக்கொள்வது என்று முடிவு செய்திருக்கிறாராம்.

## சர்க்கார் கட்சித் தலைவரை 'பச்சைப் புளுகன்' என வர்ணனை!

### எதிர்க் கட்சித் தலைவர் வெளியேற்றப்படுகிறார்

#### ஆஸ்திரேலிய மக்கள் சபையில் சம்பவம்

கான்பெரா, அக். 25—

ஆஸ்திரேலிய மக்கள் சபையில் சர்க்கார் கட்சித் தலைவரான சர் எரிக் ஹாரிசன் என்பாரை, 'பச்சைப் புளுகன்' என்று வர்ணித்ததற்காக, எதிர்க் கட்சித் தலைவரும், ஆஸ்திரேலிய தொழிற்கட்சித் தலைவருமான டாக்டர் ஹெர்பெர்ட் ஈவாட் என்பாரை சபையிலிருந்து வெளியேறுமாறு சபைத் தலைவர் உத்தரவிட்டதாகத் தெரியவருகிறது.

டாக்டர் ஈவாட் மன்னிப்புக் கோருவதாய் தெரிவித்ததை ஏற்க மறுத்த உதவி சபைத் தலைவரான ஆடெர்மான், டாக்டர் ஈவாட் வெளியேறும்போது அமைதி நிலவிய சபையைக் கண்டு நடுக்குற்றவராகவோ, என்னவோ, அவரைத் திரும்ப அழைத்து, மன்னிப்புக் கோருவதானால் சபையில் இருக்கலாம் எனத் தெரிவித்தாராம்.

வேவு பார்த்தலைக் குறித்த விசாரணைக் குழுவின் அறிக்கை மீது கடுமையான விவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தபோதே இந்தச் சம்பவம் நடைபெற்றிருக்கிறது.

டாக்டர் ஈவாட் பேசிக்கொண்டிருக்கும்போது, எரிக் ஹாரிசன், 'குறிப்பிட்ட காலத்திற்கும் அதிகமாகப் பேசிவிட்டதாக'க் குறிப்பிட்டார்.

உடனே டாக்டர் ஈவட், ஹாரிசனை நோக்கி, 'நீங்கள் ஒரு பச்சைப் புளுகன்' என்று குறிப்பிட்டார்.

இதற்காகவேதான், அவர், சபையிலிருந்து வெளியேறுமாறு உத்தரவிடப்பட்டார்.

விவாதத்தின்போது பிரதமர் மென்சிஸ், 'விசாரணைக் குழுவை டாக்டர் ஈவாட் ஈவிரக்கமின்றி, காரணமேதுமில்லாது தாக்கி வருகிறார்; தனது சொந்த நலனுக்காகவும், ஆஸ்திரேலியாவில் உள்ள ஒவ்வொரு கம்யூனிஸ்டுக்கு ஆதரவாகவும் அவர் பேசி வருகிறார். விவாதத்தில், விசாரிக்கப்பட வேண்டிய மனிதராக டாக்டர் ஈவாட்தான் இருக்கிறார்," என்று குற்றஞ் சாட்டினார்.

## இன மண்டலச் சட்டம்

### 3-இலட்சம் 'இந்தியர்' கலக்கம்!

ஜோஹனஸ்பர்க்—

தனித்தனியாக வாழவேண்டும்—வர்த்தகம் புரிய வேண்டும்—தொழில் செய்ய வேண்டும்—என்று இனவாரியாகத் தென்னாப்பிரிக்காவைப் பல மண்டலங்களாகப் பிரிக்கும் சட்டத்தினால், முதன் முதலில் பாதிக்கப்படவிருப்பவர்கள் அங்குள்ள இந்தியர்கள்தான் என்று தெரிய வருகிறது.

டர்பன் நகர சபை, உடனடியாக இந்த இன மண்டலச் சட்டத்தை அமுல் செய்யுமாறு தேசிய சர்க்காரைக் கோரியிருப்பதாகவும், சர்க்காரும் சீக்கிரமே டர்பன் நகரில் இதனை அமுல் செய்வார்கள் என்று தான் நம்புவதாயும் டர்பன் நகர் 'மேயர்' தெரிவித்திருக்கிறாராம்.

இந்த புதிய சட்டத்தினால், தென் ஆப்பிரிக்காவில் வாழும் 3 இலட்சம் 'இந்தியர்'களும் கலங்கிப் போயிருப்பதாகத் தெரியவருகிறது.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 26—10—'55 புதன்

# ஐ. நா. நிறுவன நாள்

'எதிர்கால மக்களை பெரும் போர்களின் கொடுமைகளினின்றும் தப்புவிக்கவும், அவர்களுக்கு அதிகமான சுதந்திரம் உள்ள நிலையில், சமூக முன்னேற்றமும், வாழ்க்கைத் தர உயர்வும் ஏற்படச் செய்யவும் தோற்றுவிக்கப்படுகிறது இந்த நிறுவனம்' என்ற முன்னுரையுடன், இன்றைக்கு பத்து ஆண்டுகளுக்கு முன், 50 நாடுகள் கூடித் தொடங்கின, ஐக்கிய நாடுகள் மன்றத்தை.

இந்தக் கிழமை முழுவதும், நேற்று முன்னாள் முதல் ஐ.நா. வாரம் கொண்டாடப்படுகின்றது.

இந்த அகில உலக நிறுவனம், அரசியல் துறை நீங்கலாக, சமூக, பொருளாதாரத் துறைகளில், பத்து கிளைகளுடன் இயங்கி வருகின்றது. உலக சுகாதார நிறுவனம், உலகக் குழந்தைகள் நிதி, உணவு, விவசாய நிறுவனம், கல்வி விஞ்ஞானம் பண்பாட்டு நிறுவனம், உலக பாங்கு, அகில உலகச் செலாவணி நிதி, அகில உலகத் தொழிற் சங்கம் முதலியன அவற்றுள் இடம் பெறுபவை.

சமூக, பொருளாதாரத் துறைகளில் ஐ. நா. நிறுவனம் மேற்கொண்டுள்ள பணியை, ஐ. நா.-வில் அங்கம் வகிக்கும் நாடுகள் மட்டுமின்றி, இதர நாட்டவரும் பாராட்டியிருக்கின்றனர்; ஆனாலும், இத்துறைகளில், ஐ. நா. இன்னும் விரிவான பணிகளை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது என்று பலரும் கருத்தறிவித்திருக்கின்றனர்.

'உலக நிறுவனம் என்ற முறையில், அரசியல் துறையைப் பொறுத்து, ஐ. நா. வெற்றிகரமான நடைமுறையைக் கைக்கொண்டிருப்பதாகக் கொள்வதற்கில்லை' என்று கூறுவோர், ஐ. நா. முயன்று இன்னும் தீர்வு காண முடியாதிருக்கும் சிக்கல்கள் பலவற்றைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

'உலக நிறுவனம் என்ற முறையில், உலகெங்கணுமுள்ள எல்லா நாடுகளும், இந்த நிறுவனத்தில் இடம் பெறவில்லை—அதனால் நிறுவனம் முழுமை பெறவில்லை' என்ற ஒரு பெருங் குறையை, பத்து ஆண்டுகளாகியும் இன்னும் ஐ. நா. நிறுவனம் சுமந்து கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

'சிக்கல்களுக்குத் தீர்வு காணப்பட முடியாமைக்கும், நிறுவனம் முழுமை பெற இயலாமைக்கும், உலகின் மிகப் பெரிய வல்லரசுகளெனப்படும் சில நாடுகளே மூல காரணம்' என்று பொதுவாகக் கூறப்படுவதை, தவறுடையது எனக் கொள்ள இயலாது.

ஐ. நா. தோற்றுவித்த காலத்தில்—உலகில் நிலவிய சூழ்நிலைகள், பத்தாண்டுகளாகிவிட்ட இன்றைய நிலையில் வெகுவாக உருவமாற்றம் பெற்றுள்ளன என்றாலும், இந்தப் பெரும் வல்லரசினர், ஐ. நா. தோற்றுவித்த காலத்தில் கொண்டிருந்த உள்ளப் போக்கை மாற்றிக் கொண்டவர்களாகக் காணோம்.

'பூமியில் எவருக்கும் இனி அடிமை செய்யோம்' என்ற விடுதலை ஒலி, விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு, தாழ்வுற்று, வாழ்விழந்து நிற்கும் மக்கள் வாழும் நாடுகளில் எல்லாம் இன்று எழும்பி எழும்பி எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. இந்த விடுதலைக் குரலுக்கு செவிசாய்க்க மறுக்கும் ஆதிபத்தியவாதிகள்தான், இன்றும், ஐ. நா. நிறுவனத்தில் செல்வாக்கும், ஆதிக்கமும் பெற்று விளங்குகின்றனர்.

அடிமைப்பட்டிருப்போர் தளையை அறுத்துக்கொள்ளுவதற்காக முயற்சிக்கும்போது, ஆதிபத்தியக்காரர்கள் கட்டவிழ்த்துவிடும் கொடிய அடக்குமுறைகளையும், அதற்காகத் துணைக்கு அழைக்கும் அநியாய வாதங்களையும், ஐ. நா. நிறுவனம் விவாதிக்க வேண்டும—என்று சுதந்திர நாடுகள் சில கோரும்போது, ஐ. நா.-வில் உள்ள—ஒருகாலத்தில் அடிமைப்பட்டிருந்து விடுதலை பெற்ற நாடுகள்கூட, கோரிக்கையை எதிர்ப்பதைக் காண்கிறோம்—தங்கள் சுயநல, குறுகிய, உயர்ந்தோர் என்ற போலிப் பெருமை கொண்ட போக்கினால்!

பல்வேறு அரசு முறைகளைக் கொண்ட பல நிலப்பிரிவுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஐ.நா. நிறுவனம், உண்மையில், உலக மக்கள் அனைவரின் நலனுக்கு பாடுபட வேண்டும் என்று விரும்பினால், முதலில், அந்தப் பல்வேறு அரசு முறைகளிலும் வாழும் மக்கள் முழுச் சுதந்திரமும், சுயநிர்ணய உரிமையும் பெற்றுள்ளார்களா என்பதைக் கண்டறிந்தாக வேண்டும்; அப்போதுதான்—அல்ஜீரியா சுதந்திரம் பற்றிய விவாதம் ஐ. நா. சபையில் வந்தபோது, பிரான்ஸ், 'இது எங்கள் உள்நாட்டு விவகாரம்; இதில் தலையிடுவதற்கு எவருக்கும் உரிமை இல்லை'—என்று கூறித் தப்பித்துக்கொள்ள முயன்றது போல, ஆதிக்கக்காரர்கள் தப்ப இயலாதிருக்கும். சுதந்திரம், சுய நிர்ணய உரிமை, உள்நாட்டு விவகாரம், இவற்றிற்கெல்லாம் தெளிவான பொருள் நிர்ணயிக்கப்பட வேண்டும்; அப்போதுதான், உலகின் ஒரு பகுதி மக்கள், தாங்கள் குறிப்பிட்ட ஒரு அரசு முறையின் கீழ் தங்களது உரிமைகளுக்கும், விடுதலைக்கும், வாழ்விற்கும், பாதுகாப்பு இல்லை என்று கருதும் போது, அவர்கள் விரும்புகிற சுதந்திரமான அரசு முறையை நிறுவிக் கொள்வதற்கு உலக நிறுவனமான ஐ. நா. உதவ முடியும் — என்று, விடுதலை கோரிக் கொண்டிருக்கும் கீழ் நாட்டு அரசியல் வாதிகளில் நுண்ணறிவு படைத்தோர் கருதுகின்றனர்.

உலகில் அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்கள், இன்னும், 'ஐ. நா. நிறுவனம், தங்கள் விடுதலைக்கு உதவ முடியும்'—என்று தாங்கள் கொண்டிருக்கிற நம்பிக்கையை இழந்துவிடவில்லை என்றே கூறலாம்.

தீர்வு காண முடியாத நிலையில் உள்ளதும், புதிதாக உருவாகக் காத்திருப்பதுமான பல சிக்கல்களையும் சந்திக்கவிருக்கும் ஐ. நா., உலகில் நல்லோர் விரும்பும் வண்ணம் முழுமை பெற்று, பயன்மிகு பணியாற்ற, அதில் இப்போது அங்கம் வகிக்கும் நாடுகள் பலவும், எல்லா நாடுகளும் ஐ. நா.-வில் இடம்பெற வழிவிடவும், உலக மக்கள் அனைவரும் சுதந்திரமுடன் வாழச் செய்யவும் தங்கள் உள்ளத்தைப் பெரிதாக்கிக்கொள்ள வேண்டும்.

அதுவே, இந்த ஐ. நா. நிறுவனம் தோன்றிய நாளில், விடுதலை விரும்பிகள் தெரிவிக்கக்கூடியதாயிருக்கும்.

# பிரெஞ்சு—ஜெர்மன் உறவு முறிந்துவிடுமா?

## சார் பிரதேசத்தில் மீண்டும் புயல்

### நிலைகள் குறித்த விளக்கம்

சார்புருக்கன், அக். 24—

பிரான்சுக்கும் — ஜெர்மனிக்கும் இடையேயுள்ள 'சார்' பிரதேசம், சுமார் 967 சதுர மைல் பரப்பளவும், சுமார் 10 இலட்சம் மக்களும் கொண்ட பள்ளத்தாக்குப் பூமி

மக்களில் பெரும்பாலானோர் ஜெர்மானியர்; இங்கு நிலக்கரிச் சுரங்கங்கள், உருக்குத் தொழிற்சாலைகள் நிரம்ப உண்டு. இந்தப் பகுதி ஜெர்மானிய நாட்டைச் சேர்ந்ததாகும்; ஆனால், கடந்த யுத்தத்தின் முடிவிலிருந்து, பிரான்ஸ் இதனைத் தனது ஆதிக்கப் பிடியில் வைத்திருந்தது.

இந்தப் பூமியின் பாதுகாப்பு, வெளி விவகாரம் இவை எல்லாம், பிரெஞ்சு சர்க்காரின் பொறுப்பிலேயே இருந்து வருகின்றன.

இந்தப் பகுதியின் பிரதம மந்திரியாக ஹொர்ஜோஹான்ஸ் ஹாப்மென் என்பார் இருந்து வந்தார்.

இந்தப் பூமியின் நிர்வாக ஆதிக்கம் குறித்த நெடுநாட்களாகவே ஜெர்மனிக்கும் — பிரான்சுக்குமிடையே புகைச்சலும், பூசலும் உண்டு

இப்போதிருக்கிற அரசியல் ஆதிக்க நிலையை மாற்றுவது குறித்து, ஜெர்மனியும்—பிரான்சும் கூட்டாகச் சேர்ந்து, ஒரு ஒப்பந்தத்தை மேற்கொண்டன.

தான் உருவாக்கும் இராணுவக் கூட்டில் மேற்கு ஜெர்மனியையும், பிரான்சையும் இணைப்பதற்காக, இந்த ஒப்பந்தத்தை அமெரிக்கா உருவாக்கிக் கொடுத்தது.

இந்த ஒப்பந்தப்படி, சார் பகுதியின் உள்நாட்டு அதிகாரம் முழுவதும் சார் சர்க்காரிடம் இருக்கும்; பாதுகாப்பு, வெளி விவகாரங்களை மேற்கு ஜெர்மனி அங்கம் வகிக்கிற ஐரோப்பிய 'யூனியன்' என்ற மேற்கு ஐரோப்பிய ஐக்கியத்திற்குக் கட்டுப்பட்டு, பிரான்ஸ் மேற்கொண்டு வரும்; 'இந்தத் திட்டத்தை, சார் மக்கள் அங்கீகரிக்க வேண்டும்' என்று விதிக்கப்பட்டிருந்தது.

'இந்த ஒப்பந்தத்தை ஆதரிக்க வேண்டும்' என்று, இப்போதைய சார் சர்க்கார் மக்களிடத்தில் பிரச்சாரம் செய்தனர்.

ஆனால், 'இந்த ஒப்பந்தம் நிறைவேறினால், சார் பிரதேசம் நிரந்தரமாக ஜெர்மனியிலிருந்து பிரிந்து வாழ வேண்டிவரும்,' என்று கருதிய பலர், திட்டத்தை எதிர்த்துத் தீவிரமாகப் பேசிவந்தனர். இவர்களில், பழைய நாஜி சூறாவளிப் படையின் தலைவராயிருந்த வ்ஷ்னீடர் முக்கியமானவர்.

வாக்கெடுப்பு கடந்த 23-ந் தேதியன்று நடைபெற்றது. சுமார் 967 சதவிகித வாக்காளர்கள் வாக்கு அளித்தனர் திட்டத்திற்கு எதிராக 4,23,434 வாக்குகளும்; திட்டத்திற்கு ஆதரவாக 201,973 வாக்குகளும் கிடைத்திருக்கின்றன.

முடிவு திட்டத்திற்கு எதிராக அமைந்ததினால் பிரதமராயிருந்த ஹாப்மன் பதவியிலிருந்து விலகிக் கொள்வதாக அறிவித்திருக்கிறார்.

முதலாவது யுத்தத்திற்குப்பின், 15 ஆண்டுகள்வரை இந்த சார் பூமி, சர்வதேச சங்கத்தின் நேரடி பொறுப்பில் இருந்து வந்தது; பின்பு இட்லர் அங்கு வாக்கெடுப்பு நடத்தி, அதனை ஜெர்மனியுடன் இணைத்துக்கொண்டார்.

1945 வரையில் ஜெர்மனியுடனிருந்த இந்த சார் பிரதேசம், அதன பின்னர்—இரண்டாம் யுத்த முடிவில் பிரான்ஸ் ஆதிக்கத்தின் கீழ் வந்தது.

பின்னர் 1953-ல், சார் பகுதிக்கு சுயாட்சி வழங்கப்பட்டது.

பிரான்ஸ், சார் பகுதி தன்னிடமிருந்து போய்விடுமானால், அங்கிருந்து இப்போது கிடைக்கும் நிலக்கரியும், இரும்பும் கிடைக்காது போய்விடும் என்பதுடன், தனது நாட்டுப் பாதுகாப்புக்கும் குந்தகம் ஏற்படலாமென அஞ்சுகிறது

அமெரிக்கா உருவாக்கித் தந்த திட்டத்திற்கு மக்களின் ஆதரவு கிடைக்கவில்லை என்றாலும், சார் பகுதி, உடனடியாக ஜெர்மனியுடன் இணைந்துவிடப்போவதில்லை; தொடர்ந்து இப்போதிருப்பதைப் போன்றே பிரெஞ்சு ஆதிக்கமே அங்கு நீடிக்கும்; ஆனால், இதன் விளைவாக மீண்டும் மேற்கு ஜெர்மனிக்கும் — பிரான்சுக்குமிடையே தகராறும்—பூசலும் கிளம்பும் என்பதுடன், ஒரு ஒப்பந்தத்தை உருவாக்கித் தந்த அமெரிக்காவும் புதிய நிலையினால் கவலையுற நேர்ந்திருக்கிறது.

இப்போதைய பிரதம மந்திரி, பதவியினின்றும் விலகிக்கொள்வதை ஒட்டி, புதிய மந்திரி சபை அமையும் வரை, பழைய மந்திரி சபையே காரியங்களைக் கவனித்து வரவேண்டுமென ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாம்.

# அணு உலையும் பம்பாயில்தானும்!

இந்தியாவுக்கு கனடா இனமாக அளிக்கும் அணு உலை, பம்பாயில்தான் ஏற்படுத்தப்படுமாம்.

சிங்கப்பூரில் இச்செய்தியை அறிவித்த இந்தியத் திட்ட மந்திரி குல்ஜாரிலால் நந்தா, வெளிநாடுகளில் பயிற்சி பெற்ற இந்திய விஞ்ஞானிகளின் மேற்பார்வையிலேயே அந்த உலை நடத்தப்படுமென்றும், மருத்துவம், விவசாயம் போன்ற ஆக்கத் துறைகளில் மட்டும் ஆராய்ச்சிக்காகவும், பயிற்சிக்காகவும் அந்த அணு உலை பயன்படுத்தப்படும் என்றும் தெரிவித்துள்ளார்.

# சென்னை சர்க்காரின் பால் பண்ணை

## மாதவரத்தில் அமையும்

சென்னை, சர்க்கார் ஏற்படுத்த உத்தேசித்திருக்கும் பால் பண்ணை சென்னைக்கு அடுத்த மாதவரத்தில் அமையக்கூடும் என்று தெரிகிறது.

பம்பாய் சர்க்காரின் நிபுணர் ஒருவர் அதற்கான இடத்தைச் சுற்றிப் பார்த்து அங்கீகாரம் அளித்திருக்கிறாராம். சுமார் 1,400 ஏகர் நிலப் பரப்பில் அமையும் இந்தப் பண்ணையில் கறவை மாடுகள் மட்டுமின்றி பால்வற்றிய மாடுகளும், கன்றுகளும்கூட பராமரிக்கப்பட ஏற்பாடு செய்யப்படுமாம்.

# 'அமைதி' எங்கே?

## 1954-ல் மட்டும் 6,269 தொழில் தகராறுகள்!

## 266 வேலைநிறுத்தம், கதவடைப்பு ஏற்பட்டனவாம்!

சென்னை, அக் 25—

சென்னை அரசாங்கத் தொழிலாளர் துறையினர் புலன் விசாரணைக்கு 6 269 தொழில் தகராறுகள் 1954-ல் வந்துள்ளனவாம்.

தொழிலாளர் துறையினர் விடுத்துள்ள அறிக்கையில் காணப்படுவதாது :—

இந்த ஆண்டில் 266 வேலை நிறுத்தங்களும், கதவடைப்புகளும் நடைபெற்றிருக்கின்றன; இவைகளில் ஒன்றுமட்டும் நடுநிலைத் தீர்ப்புக்காக விடப்பட்டது 30 சந்தர்ப்பங்களில் நேரடியாகப் பேச்சு நடத்தியே உடன்பாடு ஏற்பட்டது. 150 சந்தர்ப்பங்களில் தாமாகவே வேலையை மீண்டும் தொடங்கினர். மற்ற வேலை நிறுத்தங்கள் தொழிலாளர் துறையினரின் குறுக்கீட்டால் ஒரு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டன.

வேலையிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களையும், தற்காலிகமாக நீக்கப்பட்ட தொழிலாளர்களையும் மீண்டும் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று கோரியே 2,130 தொழில் தகராறுகள் ஏற்பட்டன.

ஊதிய உயர்வுக்காக 930 தொழில் தகராறுகளும், போனசுக்காக 521 தொழில் தகராறுகளும் ஏற்பட்டன.

மற்ற தொழில் தகராறுகள் பஞ்சப்படி, விடுமுறை வசதிகள், வேலை நிபந்தனைகள் முதலியவைகள் சம்பந்தமாக ஏற்பட்டவை.

இவைகளில் 163 தகராறுகள் நடுநிலைத் தீர்ப்புக்காக அரசாங்கத்தினரால் அனுப்பிவைக்கப்பட்டன.

இந்த ஆண்டில் 10 நிர்வாகத்தினர் மீது வழக்குகள் தொடரப்பட்டன; அவைகளில், இரண்டில் தண்டனையும் அளிக்கப்பட்டது. மற்ற எட்டு வழக்குகள் மீது இன்னும் தீர்ப்புக் கூறப்படவில்லை.

# கோதாவரி தண்ணீர் சென்னை திரும்புமா?

## நிதி அமைச்சர் நம்பிக்கை?

கோயமுத்தூர்—

"மழையை மட்டுமே வறண்ட பகுதிகள் நம்பியிருப்பதால், அங்கெல்லாம் அடிக்கடி பஞ்ச நிலைமை ஏற்படுகிறது; இந்த நிலையைத் தடுப்பதற்கு எங்கெங்கு இயலுமோ அங்கெல்லாம் நீர்த் தேக்கங்கள் கட்டுவதற்கு சர்க்கார் முயற்சி செய்து வருகிறது. காவேரி தண்ணீர் முழுமையும் பயன்படுத்தப் படுகிறது; மற்றுமுள்ள பெரிய ஆறுகளுக்கு அணைகள் கட்டுவதற்குத் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன," என்று, பல்லடம் தாலுகா விவசாயிகள் மாநாட்டில் பேசுகையில், நிதி மந்திரி சுப்பிரமணியம் தெரிவித்துவிட்டு மேலும் சொன்னார் :—

"கிருஷ்ணா, கோதாவரி தண்ணீரை பாசனத்துக்காக சென்னை மாநிலத்திற்குக் கொண்டு வருவதற்கு சர்க்கார் முயற்சித்து வருகிறது; இந்த இரு நதிகளின் தண்ணீரில் 10 சதவிகிதத்தைத் தான் ஆந்திரா பயன்படுத்துகிறது; மிகுதியான தண்ணீரெல்லாம் கடலில் விழுந்து பாழாகிவிடுகிறது; இந்த உபரி நீரை சென்னைக்குத் திருப்பலாமென பரிசீலனை நடத்திய என்ஜினீயர்கள் கருத்தறிவித்துள்ளனர்; ஆந்திர மக்களும் அவ்வாறே கருதுகிறார்கள்; ஆந்திர சர்க்காரும், உபரி நீரை சென்னை மாநிலம் பயன்படுத்திக் கொள்ளுவதற்கு அனுமதிப்பார்களென நம்புகிறேன். இந்தத் திட்டம் அமுலுக்கு வந்தால், செங்கற்பட்டு, வடஆற்காடு, தென்ஆர்காடு மாவட்டங்கள் பெரிதும் பயன்பெறக் கூடும்."



# நாஞ்சில் மாவட்டத்தில் அண்ணுதுரை

## மாநில மாநாட்டு நிதிக்கு ரூ. 1,500

21—10—55 மாலை 4-30 மணியளவில், பணகுடியில், அவ்வூர் தி. மு. கழகத் தோழர்களும் நாஞ்சில் தோழர்கள் ஏ. இராமசாமி, ஜி. குமரேசன் ஆகியோரும், ஆயிரக்கணக்கான பொது மக்களும், அண்ணு அவர்களை மலர்மாலை சூட்டி வரவேற்றனர்.

பின்னர், 4-45 மணியளவில், ஆரல்வாய்மொழி எல்லையில், கோட்டாறு தோழர் ஏ. குமாரவேலு தலைமையில், நாஞ்சில் மாவட்ட தி. மு. கழகத் தோழர்கள், பல்லாயிரக்கணக்கான மக்கள் புடைசூழ அண்ணு அவர்களை எதிர்கொண்டழைத்து மலர் மாலை சூட்டி வாழ்த்துக் கூறினர்.

பிறகு, பல கார்கள் பின்தொடர, அண்ணு அவர்களது கார் நாகர்கோவிலுக்குப் புறப்பட்டது; வழிநெடுகிலும் இருமருங்கிலும் மக்கள் நின்று, இலட்சிய ஒலிகளையும், வாழ்த்தொலிகளையும் எழுப்பினர்; வழியில், தோவாளை, வெள்ளமடம் ஆகிய ஊர்களில் அண்ணுவுக்கு வரவேற்பளிக்கப்பட்டது.

நாகர்கோவில் நகரின் நுழைவு வாயிலாகிய ஒழுகினசேரியில், அண்ணுவைக் காண ஆயிரக்கணக்கான தி. மு. கழகத் தோழர்களும், அனுதாபிகளும், பொது மக்களும் குழுமியிருந்தனர். தோரணவாயில்கள் கொடிகளாலும், மலர் மாலைகளாலும் கவினுற அமைக்கப்பட்டிருந்தன

வடசேரி தி. மு. கழக செயலாளர் தோழர் பி. இராமச்சந்திரன் தலைமையில், கழகத் தோழர்கள் கையில் இருவண்ணக் கொடியேந்தி வாழ்த்தொலி கிளப்பி அண்ணுவை வரவேற்றனர்; மலர் மாலைகள் அணிவித்தனர். நகரில் உள்ள எல்லாக் கிளைக் கழகங்களின் சார்பாகவும் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

பின், நகரின் பல பாகங்களுக்கும் அண்ணு அவர்கள் காரில் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். கடைசியில், நகரப் பூங்காவின் அருகில் உள்ள தோழர் வி. எஸ். சாமிநாதனுர் அவர்களது இல்லில் அண்ணுவுக்கும் ஏனையோருக்கும் தேநீர் விருந்து அளிக்கப்பட்டது.

மாலை 7-30 மணிக்கு ஒழுகினசேரி அசோகா தியேட்டரில், தோழர் கே. ஏ மதியழகன் தலைமையில் சிறப்புச் சொற்பொழிவுக் கூட்டம் நடைபெற்றது.

தலைவர் தம் முன்னுரையில், திரு-கொச்சி தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் இணையவேண்டுமென்றும், ஆனால், மாநில புனரமைப்புக் குழு, அதற்கு மாருகவே தனது அறிக்கையைத் தயாரித்திருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

அடுத்துத் தோழர் அ. பொன்னம்பலனுர் அவர்கள், காங்கிரஸ் ஆட்சியாளரின் போக்கு வெள்ளையராட்சியின் பிரதிபலிப்பாகவே காணப்படுகிறதென்றும், இந்நிலை மாறி நாடு முன்னேற, மக்கள் நல்வாழ்வுபெற திராவிட நாடு திராவிடருக்காவது தவிர வேறு வழியில்லை என்றும் எடுத்தியம்பினர்.

பிறகு, அண்ணு அவர்கள் பேச ஆரம்பித்ததும், நாஞ்சில் மாவட்டத் தி. மு. கழகக் கிளைகளின் சார்பாகவும், பொது மன்றங்கள் சார்பாகவும், தனிப்பட்டோர் சார்பிலும் மலர் மாலைகள், கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

அடுத்து, மாவட்டச் செயலாளர் தோழர் வி. எம். ஜான் அவர்கள் நிதி பிரிப்பதற்கு தாம் கையாண்ட முறைகளையும், அவைகளுக்கு ஏற்பட்ட இடையூறுகளையும், ஆனல் அவற்றையெல்லாம் துச்சமென மதித்துத் தளராது அயராது, அலுக்காது ஒத்துழைத்த கழகத் தோழர்களின் உழைப்பைப் பாராட்டியும் பேசினர்.

பின்னர், அண்ணு அவர்களது சிறப்புச் சொற்பொழிவுக் கூட்டத்தின் மூலமும், கிளைக் கழக நன்கொடையாகவும் கிடைத்த 1,500 ரூபாயை கழகத்தின் சார்பாகத் தோழர் வி. எஸ். சாமிநாதனுர் அவர்கள், பேராரவாரத்திடையே அண்ணு அவர்களிடம் அளித்தார்.

அண்ணு அவர்கள், நிதி தந்ததற்கு நன்றி தெரிவித்தும், கழகத் தோழர்களைப் பாராட்டியதோடு, நவம்பர் மாதத்தில் நாஞ்சிலுக்குத் திரும்பவும் வருகை தருவதாக உறுதிமொழி புகன்றார்; இதைக் கேட்ட மக்கள் மகிழ்ச்சி மேலீட்டால் கையொலி எழுப்பினர்.

பின்னர் மாநில புனரமைப்புக் குழுவின் அறிக்கையில் காணும் பிரித்தாளும் சூழ்ச்சியினை அம்பலப்படுத்தி, அதற்கு முடிவு காண சகல கட்சிகளும் ஒன்று சேர்ந்து போராட்டத் திட்டம் தயாரிக்க வேண்டுமென்றும், இத்தகைய ஆக்க வேலைகட்குத் தி. மு கழகம் என்றும் தயார் என்றும் குறிப்பிட்டதோடு, கழகம் எதற்காகப் பாடுபட்டு வருகிறது என்பதையும், நடைபெற இருக்கும் மாநில மாநாட்டில் இன்றுள்ள சீர்கேட்டினை நீக்குவதற்குள்ள வழி காண்பதற்கு கழகத் தோழர்கள் கருத்துரை வழங்குதல் வேண்டும் எனவும், திராவிட நாடு தனி நாடு ஆவது எவ்வளவு அவசியம் என்பதையும் விளக்கிக் காட்டி அரியதோர் சொற்பெருக்காற்றினர்.

கூட்ட இறுதியில், திரு-தமிழ்ப் பகுதிகள் தாய்த் தமிழகத்துடன் இணையவேண்டுமென்றும், இதற்காக நடைபெறும் எந்தக் கிளர்ச்சிகளையும் ஆதரிப்பது என்றும், தமிழ் நாட்டிற்கு 'சென்னை மாநிலம்' என்று பெயரிடப்பட்டிருப்பது குறித்து வருந்தியும், அதனை 'தமிழ் நாடு' என்றே அழைக்க வேண்டுமென கோரிக்கொண்டும், திரு-கொச்சி தமிழ்த் தாலுகாக்களை ஒன்றாக இணைத்த தமிழ் நாடு பிரிந்த பின், அந்தத் தாலுகாக்களையெல்லாம் நாஞ்சில் மாவட்டத்துடன் சேர்க்கவேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைமை நிலையத்தையும், சென்னை சர்க்காரையும் கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# திரு.வி.க. நினைவு நாள்

## இரா. நெடுஞ்செழியன் சொற்பொழிவு

21—10—55 பிற்பகல் 4.10 மணியளவில், பூவிருந்தவல்லி கழக உயர்நிலைப் பள்ளித் தமிழ் இலக்கிய மன்றச் சார்பில், திரு. வி க. அவர்களின் நினைவு நாள் விழா திரு எம். பி. சந்தானசாமி முன்னிலையில் கொண்டாடப்பட்டது கூட்டத்திற்கு ஆசிரியர் திரு தா. சிங்காரவேலனுர் தலைமை வகித்துத் தமிழ்ப் பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக மொழிந்தார்.

பின்னர், தி. மு. கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், திரு. வி. க அவர்களின் வாழ்க்கையிற் கண்ட உண்மைகளையும், கல்வியின் இன்றியமையாமை, மாணவர்களின் கடமை, நாகரீக வளர்ச்சி, பெண்ணுரிமை ஆகியவற்றைக் குறித்தும் அரியதோர் உரை நிகழ்த்தினர்.

மன்றச் செயலாளர் தோழர் க. சிவானந்தம் அனைவரையும் வரவேற்றுப் பேசினர்.

தோழர்கள் பொ. பாலசுப்பிரமணியன், க. சம்பந்தன் ஆகியோர் பொதுச்செயலாளர் அவர்கட்கு வரவேற்புரை வாசித்தளித்தனர்.

பின்னர், மன்றத் துணைச் செயலாளர் தோழர் மோகன் நன்றி கூறினர்.

★

# புகளூர் சர்க்கரை ஆலை தொழிலாளர்கள்

## மாநில மாநாட்டு நிதிக்கு ரூ. 201 அளித்தனர்

திருச்சி மாவட்டம் புகளூர் தி. மு கழகச் சார்பில் 18-10-55 இரவு 7 மணிக்கு தோழர் எஸ். கே. சாமியப்பன் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் அ. பொன்னம்பலனுர், ஏ. பி. தருமலிங்கம், கே. ஏ மதியழகன், டி. பி. மூர்த்தி ஆகியவர்கள் தி மு கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசிய பின், அண்ணு அவர்கள் திருச்சி மாநில மாநாடு குறித்தும், வடவர் ஆதிக்கம், வடவர் சுரண்டல் பற்றியும், திராவிட நாடு பிரிய வேண்டிய அவசியம் குறித்தும் விரிவுரையாற்றினுர்.

சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள், ஊழியர்கள் சார்பில் மாநில மாநாட்டு நிதிக்கு ரூ. 201 தரப்பட்டது.

அண்ணு அவர்களுக்குப் பல கிளைக் கழகங்கள் சார்பில் மலர் மாலைகளும், வரவேற்பு மடல்களும் வழங்கப்பட்டன.

★

# புதுக்கோட்டை தி. மு. கழக பொதுக்கூட்டம்

19—10—55 மாலை $7\frac{1}{2}$ மணிக்கு புதுக்கோட்டை தி. மு கழகப் பொதுக்கூட்டம் திலகர் திடலில் தோழர் சுப்பையா தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் என். எஸ் இளங்கோ, ஏ. பி. தருமலிங்கம் ஆகியவர்கள் திருச்சி மாநில மாநாடு குறித்தும், தி. மு. கழகம் இலட்சியங்களை விளக்கியும் பேசினர்.

இறுதியில் அண்ணு அவர்கள், வடவர் ஆதிக்கம்—கட்டாய இந்தி ஆகியவை பற்றி விளக்கி அரியதோர் உரை நிகழ்த்தினர். பல கிளைக் கழகங்கள் சார்பில் வரவேற்பும், மலர்மாலைகளும் அண்ணு அவர்கட்கு வழங்கப்பட்டது மாநில மாநாட்டுக்கு நிதியும் வழங்கப்பட்டது.

★

# புதுக்கோட்டை கல்லூரியில் அண்ணு

## ஆங்கிலத்தில் சொற்பொழிவு

புதுக்கோட்டை கல்லூரி மாணவர்கள் யூனியன் சார்பில், 20—10—55 காலை 8-30 மணிக்கு, யூனியன் தலைவர் அவர்களால் அண்ணு அவர்கள் வரவேற்கப்பட்டார்

பின்னர், அண்ணு அவர்கள், ஆங்கிலத்தில் ஒருமணி நேரம் விரிவுரையாற்றினுர்.

# சம்யுக்த மராட்டியம் அமைக்க போராட்டம்

## சங்கர்ராவ் தேவ் சகல அதிகாரமும் பெறுகிருர்

பம்பாயைத் தலைநகராகக் கொண்ட ஐக்கிய மராட்டியம் அமைப்பதற்காக, அமைதியான—சட்ட வரம்பிற்குட்பட்ட போராட்டத்தை நடத்தவும், பிரச்சாரத்தை வலுப்படுத்தவுமான எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுவதற்கு, 'சம்யுக்த மராட்டிய பரிஷத்'தின் செயற்குழுவினர், தலைவரான சங்கர்ராவ் தேவிற்கு சகல அதிகாரங்களையும் வழங்கியிருக்கின்றனர்.

மாநில புது அமைப்புத் திட்டம் பற்றி நீண்டநேரம் விவாதித்து, பத்து தீர்மானங்களை நிறைவேற்றியுள்ள செயற்குழுவினர், தலைவருக்கு போராட்டம் நடத்த அதிகாரம் வழங்கியும் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர்.

'பரிஷத்' செயற்குழுவினர், குழுவின் சிபாரிசுகளை ஒட்டி, மராட்டிய காங்கிரஸ் தீர்மானம், டில்லிப் பேச்சுக்கள் முதலிய அனைத்தையும் ஒருசேரக் கவனித்த பின்பே இந்தத் தீர்மானங்களை மேற்கொண்டதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

# வரதட்சிணையை ஒழிப்பதற்கு முடிவு

## பம்பாய் சர்க்கார் மசோதா

பம்பாய், அக். 24—

திருமணங்களில் வரதட்சிணை வாங்குவதையும், கொடுப்பதையும் தடுப்பதென பம்பாய் சர்க்கார் உத்தேசித்திருக்கிறது.

பம்பாய் மாநிலத்தில் வரதட்சிணை கொடுப்பதும், வாங்குவதும் பழக்கத்திலிருந்து வருவதாகவும், இதனுல் தாய் தந்தையர் தங்களுடைய பெண்களுக்குக் கணவர்களைத் தேடித் தருவதற்குப் பெருந்தொகைகளைக் கொடுக்க வேண்டியிருப்பதாகவும், இம்மாநிலத்தில் சில பகுதிகளில் பெண்களை விற்பதும், வாங்குவதும் சர்வ சாதாரண மாகிவிட்டதாகவும், ஆகவே, இந்த கெட்ட பழக்கத்தை ஒழிப்பது அவசியமெனவும் மசோதாவில் கூறப்பட்டுள்ளது.

ஒழுக்கக் குறைவான விளம்பரங்களைக் கட்டுப்படுத்தவும் சர்க்கார் உத்தேசித்திருக்கிறது.

★

# திருப்பத்தூர்—புதுப்பட்டி வரவேற்பு

20—10—55 மாலை 4-30 மணிக்கு, திருப்பத்தூர் பகுதி, புதுப்பட்டியில் தி. மு. கழகத் தோழர்கள் அண்ணு அவர்களை வரவேற்று மலர் மாலைகள் சூட்டி வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள்.

## கருணாநிதி படிப்பகம் திறப்பு விழா

20—10—55 மாலை 5-30 மணிக்கு, திருப்பத்தூர் (இராமநாதபுரம் வட்டம்) கருணாநிதி படிப்பகத் திறப்பு விழா தோழர் அ. பொன்னம்பலனுர் தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் கே. ஏ. மதியழகன், கண்ணதாசன் ஆகியோர் கருணாநிதி படிப்பகம் நல்ல பயன் அளிக்கப்படும் வகையில் மக்கள் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், நிர்வாகிகளும் படிப்பகத்தைத் திறம்பட நடத்தி மக்கட்கு பயன்படச் செய்ய வேண்டுமென்றும் கூறினர்.

பின்னர், அண்ணு அவர்கள், கருணாநிதி படிப்பகம, மக்கட்கு நல்ல முறையில் பயன்படவேண்டுமென்றும், படிப்பகத்தின் மூலம் மக்கள் அறிவு வளர்ச்சி பெறவும், உலக வரலாற்றையும், நடைமுறைகளையும், அரசியல் வரலாற்றையும் அறியும் நல்ல வாய்ப்பைப் பெற முடியுமென்றும் விளக்கிக் கூறி, படிப்பகத்தைத் திறந்து வைத்தார்.

## ஊர்வலம்—அழகிரி படிப்பகம் திறப்பு

திருப்பத்தூர் — தெம்மாப்பட்டு முக்கிய வீதிகளில் கடைவீதி வழியாக பல்லாயிரக் கணக்கான மக்கள் புடைசூழ அண்ணு அவர்கள் காரில் அமர்த்தப்பட்டு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். அதுபோது, அழகிரி படிப்பகத்தைத் திறந்துவைத்தார். தி. மு. கழகக் கொடிகளை பல முக்கிய இடங்களில் உயர்த்தினர். திருப்பத்தூர் தி. மு. கழகச் சார்பிலும், கழகக் கொடியை கழகத்தின் முன்னர் அண்ணு அவர்கள் ஏற்றி வைத்தார்.

## திருப்பத்தூர் ஊராட்சி மன்றம்—வரவேற்பு

20—10—55 மாலை $6\frac{1}{2}$ மணியளவில், திருப்பத்தூர் ஊராட்சி மன்றத்தின் சார்பில் டி. பீட்டர் தலைமையில் மன்ற உறுப்பினர்கள் அண்ணு அவர்களுக்கு வரவேற்பு மடல் வாசித்துக்கொடுத்து, மலர் மாலைகள் அணிவித்தனர்.

ஜனுப் அப்துல் காதர், அண்ணு அவர்களைப் பாராட்டி கவி ஒன்றைப் படித்துக் கொடுத்தார்.

அண்ணு அவர்கள் வரவேற்புக்கு நன்றி கூறி, ஊராட்சி மன்றத்தின் வாயிலாக மக்கட்கு நற்பணியாற்றும் ஊராட்சி மன்றத்தார் மக்கள் வாழ்க்கை முன்னேற்றம் கருதி பணியாற்றவேணுமென்றும் கேட்டுக்கொண்டார்.

## பொதுக் கூட்டம்

திருப்பத்தூர் தி மு. கழகச் சார்பில் தோழர் எஸ். முத்து தலைமையில், 20—10—55 இரவு $7\frac{1}{2}$ மணிக்கு பொதுக் கூட்டம் நடைபெற்றது. பல்லாயிரக் கணக்கான மக்கள் மழையிலும் திரண்டிருந்தனர்.

தலைவர் முன்னுரைக்குப் பின், தோழர்கள் கண்ணதாசன், கே. ஏ. மதியழகன், அண்ணு ஆகியோர் பேசினர்.

மாநில மாநாட்டு நிதிக்கு ரூ. 151—ம், பல கழகங்கள் சார்பில் ரூ. 32—5—6—ம் அளிக்கப்பட்டது. அண்ணு அவர்களுக்கு வரவேற்பு மடல்களும், கைத்தறி ஆடைகள், மலர்மாலைகளும் அணிவிக்கப்பட்டன.

# பூவிருந்தவல்லியில் ஈ.வெ.கி. சம்பத்

## வாணிபத் துறையில் வடவரின் ஏகபோகம்: தி. மு. கழகப் பொதுக்கூட்டத்தில் விளக்கம்

22—10—55 மாலை 4-30 மணிக்கு கண்டோன்மெண்டு தி. மு. கழகக் கொடிக் கம்பத்தின் அருகிலிருந்து தோழர் டி. இராசரத்தினம் தலைமையில் நூற்றுக்கு மேற்பட்ட சைக்கிள்களுடன் ஆயிரக்கணக்கான மக்கள் ஊர்வலம் சென்று, பூவிருந்தவல்லி சன்னதித் தெருத் திடலையடைந்ததும், மாலை 6 மணிக்கு, தோழர் டி. சண்முகம் எம் எல். ஏ., அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் டி. கே. பொருநான் மாணிக்கம், டி. என். சம்மந்தம் ஆகியோர் பேசிய பின், தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள், கழகத்தின் இலட்சியம் குறித்தும், வடநாட்டு முதலாளிகள் திராவிடத்தின் தேயிலை, காப்பி, மிளகு, தேங்காய், நிலக்கடலை முதலிய வாணிபத் துறைகளை எக்தெந்த முறையில் கைப்பற்றிச் சீரழிக்கிறார்கள் என்பதை விளக்கியும், நீண்டதோர் உரை நிகழ்த்தினர்.

ஊர்வலத்தில், திருமழிசை, காட்டுப்பாக்கம், மாங்காடு, குன்றத்தூர், ஆவடி, பட்டாபிராம் தி மு கழகக் கிளைகள் கலந்துகொண்டன

கூட்டத் தலைவருக்கும், சொற்பொழிவாளருக்கும் கைத்தறித் துண்டும், மலர் மாலைகளும், சில கழகங்கள் சார்பில் அணிவிக்கப்பட்டன

கூட்ட இறுதியில் பல முக்கியத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# சிங்களம் மட்டுமே அலுவல் மொழி?

## பொறுமையுடனிருக்க வேண்டுமாம்!

## மொழிச் சிக்கல் குறித்து இலங்கைப் பிரதமர் உபதேசம்!

கொழும்பு, அக். 24—

"இலங்கையின் அலுவல் மொழி விஷயத்தில், எவரும் உணர்ச்சிவயப்பட்டு முடிவுகளை மேற்கொள்ள வேண்டாம்; இந்தச் சிக்கலுக்குப் பரிகாரம் தேடுவதற்கு மக்கள், பொறுமையுடனும், சகிப்புத் தன்மையுடனும் நடந்து கொள்ள வேண்டும்; தீர்வு காணுவதில் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஈடுபட வேண்டும்; நாம் தேடும் பரிகாரம், நாடு முழுவதின் நலன்களுக்கு உகந்ததாயிருக்க வேண்டும்—நம்மில் சிலருக்கு மட்டும் நன்மை பயப்பதாக அமையக் கூடாது,"

என்று, இலங்கைப் பிரதமர் கொத்தலாவல வானொலி மூலம் வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, தாய்லாந்து ஆகிய நாடுகளில் ஒரு திங்கள் நல்லெண்ணச் சுற்றுப் பயணம் மேற்கொள்ளுவதற்காக, இலங்கையிலிருந்து பயணமாகு முன் அவர் வானொலியில் பேசியிருக்கிறார்.

இந்த மொழிச் சிக்கல் குறித்து விவாதிப்பதற்காக, தான் வெளிநாட்டுச் சுற்றுப்பயணம் முடித்து தாயகம் திரும்பியதும், தனது கட்சியின் செயற்குழுக் கூட்டம் ஒன்றைக் கூட்டவும் ஏற்பாடு செய்யுமாறு அவர் தனது கட்சியினரைக் கோரியிருக்கிறாராம்.

★

### சிங்களம் மட்டுமே அலுவல் மொழி?

"சிங்களம் ஒன்றையே இலங்கையின் அலுவல் மொழியாக்க வேண்டும்,"

என்ற கொள்கையை கட்சி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது குறித்து விவாதிப்பதற்காக, ஆளும் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியின் செயற்குழுக் கூட்டம் இன்னும் ஒரு திங்கள் கழித்துக்கூடும் என்று தெரிய வருகிறது.

இதற்கான தீர்மானம் ஒன்றை இரண்டு பிரபல உறுப்பினர்கள் ஏற்கனவே தந்துவிட்டதாயும், அது குறித்து, சுற்றுப் பயணம் செல்லும் பிரதமர் கொத்தலாவல தாயகம் திரும்பியதும் விவாதிக்கப்படும் என்றும் கட்சி வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

கொத்தலாவலதான் ஐக்கிய தேசியக் சட்சியின் தலைவர்.

### சர்க்கார் பணிக்கு 'சட்டப் படிப்பு'

இனி தேவையாக இராதென அபுல் கலாம் ஆசாத் தகவல்?

புதுடில்லி, அக். 21—

"சர்க்கார் உத்தியோகங்களில் சேருவதற்கு இனிமேல் பட்டப் படிப்பு (டிக்ரி) முக்கியமானதாக இருக்காது," என்று, இந்திய சர்க்கார் கல்வி அமைச்சர் ஆசாத் சூசகமாகத் தெரிவித்துள்ளார்.

பல்கலைக் கழக இளைஞர் விழாவில் பேசுகையில், அவர், வழக்கமாகக் கையாண்டுவரும் முறையை மாற்றி, பட்டப் படிப்புக்கு முந்திய கட்டத்திலேயே வேலைக்கு எடுத்துக் கொள்ளலாமா என்பது பற்றி சர்க்கார் யோசனை செய்து வருகிறதென்றும்; இப்படி மாற்றினால்தான் கல்லூரி படிப்பு முடிந்தபின் வேலையின்றி சிரமப்படும் மாணவர்களை, பயனுள்ள பணிகளுக்கு எடுத்துக்கொள்ள முடியுமெனறும் கூறியுள்ளார்.

### குறள் வகுப்பு

★

26—10—55 மாலை 6 மணிக்கு, சென்னை-இராயபுரம், எண் 59 மன்னார்சாமி கோவில் தெரு குறள் நெறிக் கழக அறையில், தோழர் கி. தியாகராசன் குறள் வகுப்பு நடத்துவார்.

## மதுராந்தகம் தி. மு. க. கட்டிட நிதிக்காக

'இன்பக் கனவு'—நாடகம்

★

5—11—55 அன்று, மதுராந்தகத்தில், மதுராந்தகம் தி. மு. கழகக் கட்டிட நிதிக்காக, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் தலைமையில், தோழர் எம். ஜி. இராமச்சந்திரன் குழுவினர் நடிக்கும் 'இன்பக் கனவு'—நாடகம் நடைபெறும்.

குறிப்பு: மாநில மாநாட்டு நிதி அளிக்கப்படும்.

# இந்தோனேஷியாவில் அணுசக்தி நிலையம்

## சோவியத் ரஷ்யா நிறுவித் தரும்

சிங்கப்பூர், அக். 25—

இந்தோனேஷியாவில் ஒரு அணுசக்தி நிலையத்தை நிறுவித் தர ரஷ்யா ஒப்பியிருப்பதாகவும், வரும் ஆண்டு ஏப்ரல் திங்களில் திட்டம் துவங்கும் என்றும், இந்தோனேஷியா — சிங்கப்பூர் நாடுகளில் இலங்கைத் தூதுவராயுள்ள சரவணமுத்து, பத்திரிகையாளரிடம் தெரிவித்திருக்கிறார்.

தான் மூன்று நாட்களுக்கு முன் இந்தோனேஷியாவில் இருந்தபோது, இந்தோனேஷிய வெளிநாட்டிலாகா மந்திரியிடம் ரஷ்யத் தூதுவர், தனது முன்னிலையிலேயே இதனை வெளியிட்டதாகவும் சரவணமுத்து தெரிவித்திருக்கிறார்.

அந்த அணுசக்தி நிலையம் 2,500 கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யும் என்றும் விபரமறிவித்திருக்கிறார்.

★

### ஈராக்கிலும் அணு உலை

அணுசக்தியை சமாதானக் காரியங்களுக்காக உபயோகிப்பதை அபிவிருத்தி செய்வதற்கு, அமெரிக்கா அளிப்பதாகத் தெரிவித்துள்ள உதவியை ஏற்றுக்கொள்வது என்று ஈராக் சர்க்கார் முடிவு செய்திருக்கிறதாம்.

இரு நாடுகளும் இதற்கான ஒப்பந்தம் ஒன்றை மேற்கொள்ளுவது என்றும், அதன்படி, ஈராக்கில் மருத்துவ சிகிச்சைக்கு அணுசக்தியை உபயோகிப்பதற்கான வசதி, அணுசக்தி பற்றிய புத்தகசாலை, அணு உலை முதலியன அமெரிக்கா ஏற்படுத்தித் தருவதுடன், ஈராக் நிபுணர்களுக்கு அமெரிக்காவில் பயிற்சி அளிப்பது என்றும் முடிவாகியிருப்பதாகத் தெரிகிறது.

### சமுதாயத்தின் பெரும் பகுதி அழிந்துவிடும்!

அணு ஆயுதப் போர்பற்றி அமெரிக்க விஞ்ஞானி

அணு ஆயுதப்போர் மூளுமானால், சமுதாயத்தின் பெரும்பகுதி அழிந்து விடுவதோடு மட்டுமின்றி, பிற்காலச் சந்ததியினருக்கும் உடல் அமைப்பு, ஒழுக்கம் போன்ற எல்லாவிதங்களிலும் கேடுகளை விளைவிக்கக் கூடும் என்று, அமெரிக்க அணுசக்தி விஞ்ஞானி ஒருவர் கூறியுள்ளார்.

"எல்லா நாடுகளின் தகராறுகளைத் தீர்ப்பதின் மூலம் உலகப் போரைத் தவிர்த்து விடலாம் என்று நம்புகிறேன்; ஆனால், 'போர் கூடாது' என்ற ஒப்பந்தத்தின் மூலம் இவ்வாய்ப்பு ஏற்படுமா—அல்லது, மனித சமுதாயத்தையே வேறுப்பதின் மூலம் இது சாத்தியமாகுமா

என்பதை, என்னால் கூற இயலாது" என்று அவர் குறிப்பிட்டார்.

### புற்று நோய் ஆராய்ச்சி நிலையம்

சென்னையிலா திறக்கப்படும்?

உதகை—

பம்பாயிலுள்ள புற்றுநோய் ஆராய்ச்சி நிலையம் நீங்கலாக, மேலும் மூன்று நிலையங்கள் சென்னை, கல்கத்தா, ஐதராபாத் ஆகிய இடங்களில் திறக்கப்படுமென மத்திய சர்க்கார் சுகாதார இலாகா டைரக்டர்-ஜெனரல் தெரிவித்துள்ளார்.

இந்திய வைத்திய சங்கக் கூட்டத்தில் பேசிய அவர், கிராம, நகர்ப்புறக் குடிதண்ணீர், சுகாதாரத் திட்டத்திற்காக சுமார் ரூ 20 கோடி செலவில், ஒரு பெரிய தேசியத் திட்டம் மத்திய சர்க்கார் பரிசீலனையில் இருந்து வருவதாகக் குறிப்பிட்டார்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 136 'மலேரியா தடுப்பு யூனிட்டுகள்' ஆரம்பிக்கப்படுமென்றும், இதனால் நாடு முழுமைக்கும் மலேரியா பாதுகாப்பு கிடைக்குமென்றும் கூறினர்.

மாவட்ட வாரியாக மேகவியாதி தடுப்பு 'கிளினிக்'குகள் ஆரம்பிப்பதற்கும் சர்க்கார், திட்டம் வகுத்து வருவதாகக் கூறியுள்ளார்.

## போளூர் (வ. ஆ.) வட்டார தி. மு. கழகச் செயலாளர்கட்கு

★

"6—11—55 அன்று மாலை, போளூரில், தோழர் ப. உ. சண்முகம் தலைமையில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில், தோழர் மு. கருணாநிதி அவர்களிடம் மாநில மாநாட்டு நிதி அளிக்கப்படும். அதுசமயம், போளூர் வட்டாரத்திலுள்ள தி. மு. (கிளை) கழகச் செயலாளர்கள், தங்கள் தங்கள் கிளைக் கழகத்தின் மாநில மாநாட்டு நிதியின் பங்குத் தொகையை, தோழர் மு. கருணாநிதி அவர்களிடம் அளித்துவிட வேண்டுகிறேன். செயலாளர்கள் உடனடியாக நிதி வசூலில் ஈடுபட்டு, 6—11—55 அன்று அளித்து, வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழகத்தின் கோட்டாவைப் பூர்த்திசெய்ய வேண்டுகிறேன்"

என்று, வட ஆற்காடு மாவட்ட தி. மு கழகச் செயலாளர் தோழர் முல்லை-சத்தி அறிவிக்கிறார்.

### 'தீபாவளி எதிர்ப்பு'க் கூட்டம்

★

29-10-55 மாலை 3½ மணிக்கு, இலக்கை-கொள்ளுப்பிட்டி மார்டல் எலிமெண்டரி பாடசாலை மண்டபத்தில் (கோட்டை பஸ் நிலையத்திற்கு அருகில்), தோழர் ஜே அருமைநாயகம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் எஸ் கே. மாயக்கிருட்டிணன், எஸ் டி சுப்பையா, மற்றும் கிளைக் கழகத் தோழர்கள் பலர் பேசுவர்.

### 11-வது சுகாதார வாரம்

★

27-10—55 மாலை 5½ மணிக்கு, நகர இளைஞர் கழகச் சார்பில், சென்னை-சூளை, வாத்தியார் கந்தபிள்ளை தெரு, நகராண்மைக் கழகப் பள்ளியில் ஒரு படக்காட்சி நடைபெறும். 6-30 மணிக்கு தோழர் எஸ். என். பலராமன் தலைமையில் தோழர்கள் பலர் பேசுவர்

23—10—55 மாலை 5 மணிக்கு. சென்னை, இந்து யூனியன் கமிட்டி உயர்நிலைப் பள்ளியில், தாய்மார்கள் தினமும், குழந்தைப் போட்டியும் நடைபெறும். தோழியர் என். தனபாய் எம். சி., தலைமையில், தோழியர் அருண்மொழி பேசுவார். தோழியர் வி. சுசிலா நடுவராக இருந்து பரிசுகள் வழங்குவார்.

## தென் பகுதி இரயில்வேமென்ஸ் யூனியன் உறுப்பினர்களுக்கு அறிவிப்பு

எஸ். ஆர். எம். யூ. தலைவரான சீ. இராகவானந்தம் கீழ்க்கண்ட அறிக்கை ஒன்றை வெளியிட்டிருக்கிறார்:—

"சென்னை 19—10—55 (வெளியூர் 20—10—55) 'விடுதலை' இதழில், என்மீது நம்பிக்கை இல்லை என்றும், என் தலைமையில் எஸ். ஆர். எம். யூ-வின் எந்தவிதமான கூட்டமும் கூட்டுவது நன்மைபயக்காது என்றும், மத்திய சங்க நிர்வாகிகள் அறுவர் பெயரில் வெளிவந்துள்ள அறிக்கை என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. என் தலைமையில் நம்பிக்கையில்லை என்றால், மத்திய நிர்வாகக் குழு கூட்டி, அதில் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்து, அது நிறைவேறினால் என்னை விலக்கவும், நிறைவேறாவிட்டால் என் தலைமையின் கீழ் பணியாற்றவும் வேண்டியதே முறை. அறிக்கை விடுத்த தோழர்கள், மேற்கண்ட முறையைக் கையாளும்படி பணிவுடன் வேண்டிக்கொள்கிறேன்.

"கூட்டுப் பொதுச் செயலாளர் திரு. ஏ. கே. சச்சிதானந்தமும், பொன்மலை, திருச்சி கிளைகளும் யூனியன் சட்ட திட்டத்திற்கு மாறாக நடப்பதால், தான், பொதுச் செயலாளர் பதவியிலிருந்தும், 'தொழில் முரசு' ஆசிரியர் பதவியிலிருந்தும் விலகிக்கொள்ளுவதாக தோழர் வ. வீராசாமி எம்.பி., அவர்கள் எனக்குக் கடிதமெழுதியுள்ளார்கள்.

"அக்கடிதம், 17—10—55-ல் எழுதப்பட்டு, 18—10—55-ல் எனக்குக் கிடைத்தது. அக்கடிதத்தில் என்னைப் பற்றி என்ன எழுதியிருக்கிறார்கள்—கூட்டுப் பொதுச் செயலாளரைப் பற்றியும், அவர் தம் ஆதரவாளர்களைப் பற்றியும் என்ன எழுதியிருக்கிறார்கள்—என்பது, நிர்வாகக் குழுக் கூட்டத்தில், அக்கடிதம் வாசிக்கப்படும் பொழுது விளங்கும்.

"6—11—55-ல், 'விசேட நிர்வாகக் குழு கூட்டம் விழுப்புரத்தில் கூட்டுகிறேன். அதுவரையில் உறுப்பினர்கள் பொறுமையுடன் இருக்கும்படி பணிவுடன் வேண்டிக்கொள்ளுகிறேன்.

"இந்த அறிக்கையின் பிரதி ஒன்று 'விடுதலை' இதழுக்கும் அனுப்பப்பட்டுள்ளது."

## கோவா விடுதலைப் போராட்டத் தலைவர்

10 ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார்

"மராட்டியத்தைச் சேர்ந்த ஒரு கம்யூனிஸ்டு தலைவரான ராஜாராம் பட்டீல் என்பார், கடந்த ஜூன் திங்களில் கோவாவுக்குள் தொண்டர்களை அழைத்துச் சென்று, 'சத்தியாக்கிரகம்' செய்ததற்காக 10 ஆண்டு சிறைத் தண்டனையும், ரூ 2,500 அபராதமும் விதிக்கப்பட்டார்," என்று கோவா வானொலி அறிக்கை ஒன்று கூறியுள்ளதாம்.

ஒரு இந்திய வியாபாரி நான்கு ஆண்டு சிறைத் தண்டனை தரப்பட்டாராம். மேலும் மூன்று கோவாக்காரர்களுக்கும் போர்ச்சுகீசிய சர்க்காரை எதிர்த்த குற்றத்திற்காகப் பலதரப்பட்ட வகையில் சிறைத் தண்டனை தரப்பட்டதாம்.

## சென்னையில் ஒரு சமூக விஞ்ஞான கழகம்?

என். இரத்தினசாமி அறிவிப்பு

பம்பாயில் உள்ளதைப் போன்ற ஒரு சமூக விஞ்ஞான கழகம் சென்னையில் நிறுவுவதற்கான திட்டம் பரிசீலனையிலிருப்பதாக, அண்ணாமலை பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தரான பேராசிரியர் என். இரத்தினசாமி இங்கு தெரிவித்திருக்கிறார்.

இது குறித்து, சென்னை அரசாங்கத்துடனும் மாநிலத்தில் உள்ள தொழிலதிபர்களுடனும் தாம் பேச்சுவார்த்தைகள் நடத்தி வருவதாயும், இந்தியக் கத்தோலிக்க சங்கத் தலைவரான அவர் தெரிவித்திருக்கிறார்.

இரண்டு மாதங்களுக்கு முன் ஆஸ்டிரியாவில் நடைபெற்ற சமூக மாநாடு ஒன்றில் கலந்துகொண்ட அவர், மாநாட்டு உறுப்பினர்களாயுள்ள நாடுகளுக்கு, ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளப் பெரிதும் உதவியாயிருந்தது என்றும் தகவல் தந்திருக்கிறார்.

மாநாட்டில், அந்தந்த வட்டாரச் சமூகச் சிக்கல்கள் விவாதிக்கப்பட்டதாம்.

அமெரிக்கா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, இந்தோனேஷியா, இலங்கை, மலேயா, பிலிப்பைன்ஸ், ஜப்பான் முதலிய நாடுகள் கலந்துகொண்ட அந்த மாநாட்டில், குடும்ப முறைகள், சமூகச் சட்டங்கள், சமூகப் பொருளாதாரம், கல்வி முறைகள் முதலியன குறித்து பரிசீலனை நடைபெற்றதாயும் அவர் தெரிவித்திருக்கிறார்.

### கால்நடை மருத்துவ விடுதி திறப்பு விழா

22—10—55 மாலை 4 மணிக்கு, வேலூர் (சேலம்) ஊராண்மைக் கழகச் சார்பில், கால்நடை மருத்துவ விடுதி ஒன்று திறந்து வைக்கப்பட்டது. விழாவிற்கு பரமத்தி சப்-மாஜிஸ்திரேட் தலைமை வகித்தார். விடுதியை, சேலம் மாவட்டக் கால்நடை அதிகாரி திறந்து வைத்தார். டாக்டர் நடராசன், பஞ்சாயத்துத் தலைவர் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். (ந-கி.)

### மறைவு

திருவத்திபுரம் பஞ்சாயத்து போர்டு துணைத் தலைவரும், தி. மு. கழகத் தோழருமான டி. எம். ரங்கசாமி சில நாள் நோய்வாய்ப்பட்டு, 21—10—55ல் இயற்கை எய்தினார் என்று தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம் ஏ.

